بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

## இறுதித் தூதர் முஹம்மது நபி ﷺ அவர்களின்

# இறுதிப் பேருரை

ان هدى الله هو الهدى
دار الهدى
DARUL HUDA
(இஸ்லாமிய) அல்லாஹ்வின் நேர்வழியே உண்மையான நேர்வழி

# பதிப்புரை

எல்லாப் புகழும் அகிலங்களின் இறைவன் அல்லாஹ் ஒருவனுக்கே! இறையருளும் ஈடேற்றமும் நபி முஹம்மது அவர்களுக்கும், அவர்களது குடும்பத்தார், தோழர்கள், அவர்களைப் பின்பற்றும் அனைவருக்கும் உண்டாகட்டும்.

அகிலத்தின் அருட்கொடை அண்ணல் நபி முஹம்மது (ஸல்) அவர்கள், தங்களுடைய இறுதி ஹஜ்ஜில் ஆற்றிய இந்த உரை, நபியவர்களது இருபத்து மூன்று ஆண்டுகளில் மாபெரும் தியாகம் மற்றும் செயற்கரிய உழைப்பின் சாராம்சமாகும். இதில் எண்ணற்ற படிப்பினைகளும் உபதேசங்களும் நிறைந் திருக்கின்றன. ஆகவே, இப்பேருரை குறித்து வந்திருக்கும் ஆதாரமிக்க, நம்பத் தகுந்த அறிவிப்புகள் பலவற்றை மூல நூல்களிலிருந்து எங்களால் முடிந்த அளவு இதில் ஒன்று திரட்டியுள்ளோம். நாம் அனைவரும் இதன் மூலம் பலன் பெறுவதற்கும் நபிவழி நடப்பதற்கும் அல்லாஹ் நல்லருள் புரிவானாக! ஆமீன்!!

**முஃப்தி அ. உமர் ஷரீஃப் காஸிமி**
அல்குர்ஆன் மற்றும் நபிமொழி பணியாளன்
தாருல்ஹுதா, சென்னை - 1.

﴿ يَا أَيُّهَا النَّاسُ قَدْ جَاءَكُمُ الرَّسُولُ بِالْحَقِّ مِنْ رَبِّكُمْ فَآمِنُوا خَيْرًا لَكُمْ ﴾

மனிதர்களே! உங்கள் இறைவனால் முற்றிலும் உண்மையைக் கொண்டே அனுப்பப்பட்ட (முஹம்மது எனும்) இத்தூதர் நிச்சயமாக உங்களிடம் வந்திருக்கின்றார். ஆகவே, நீங்கள் அவரை நம்பிக்கை கொள்ளுங்கள். (அது) உங்களுக்கே மிக்க நன்று!

(அல்குர்ஆன் 4:170)

இதற்கு முன் என்றுமே இருந்திராத அளவிற்கு மாபெரும் கூட்டத்தால் அன்று சங்கைமிகு மக்காவின் புனித பள்ளிவாசல் நிரம்பி வழிந்தது. அங்கு கூடியிருந்தோரின் உள்ளச்சமும் வணக்க வழிபாடுகளும் அவர்களின் ஆன்மீக உணர்வுகள் முழுமை அடைந்திருந்ததை வெளிப்படுத்திக் கொண்டிருந்தன.

அதுதான் ஹிஜ்ரி 10-ஆம் ஆண்டு ஹஜ் கடமையை நிறைவேற்றக் கூடியிருந்த மாபெரும் கூட்டத்தின் எதார்த்த நிலையாகும். அரபுலகம் முழுவதிலுமிருந்து சுமார் ஒரு இலட்சத்து இருபதாயிரத்திற்கும் அதிகமானவர்கள் அங்கே குழுமியிருந்தார்கள். அதுவும் ஒரு மகத்தான வணக்கத்தை மகத்தான இறைத்தூதர் முஹம்மது ﷺ அவர்களுடன் சேர்ந்து நிறைவேற்றுகிற மன மகிழ்ச்சியில் திளைத்திருந்தார்கள்.

இறைத் தூதர் முஹம்மது ﷺ அவர்கள் அங்கு வந்திருந்த அனைவரையும் துல்ஹஜ் பிறை எட்டு அன்று மக்காவிலிருந்து 'மினா'விற்கு அழைத்துச் சென்றார்கள். அங்கு ளுஹர், அஸ்ர், மக்ரிப், இஷா, ஸுப்ஹு ஆகிய தொழுகைகளை முடித்துவிட்டு சூரிய உதயத்திற்குப் பிறகு, தோழர்களுடன் 'அரஃபா' நோக்கி புறப்பட்டார்கள். அங்கு நமிரா பள்ளத்தாக்கில் நபியவர்களுக்காக கூடாரம் அமைக்கப்பட்டிருந்தது. அதில் சூரியன் உச்சி பொழுதைக் கடக்கும் வரை தங்கி இருந்தார்கள்.

அதன் பிறகு தமது 'கஸ்வா' ஒட்டகத்தைத் தயார்படுத்தக் கூறி, அதில் பயணித்து, 'பத்னுல்வாதி' எனும் பகுதிக்கு வந்தார்கள். அமைதி காத்த நிலையில் அந்த மக்கள் நபி ﷺ அவர்களைப்

பார்த்தபடி நிற்க, அதே இடத்தில் தமது ஒட்டகத்தின் மீதமர்ந்தபடி நபியவர்கள் ஒரு சொற்பொழிவு ஆற்றினார்கள்.

நபி ﷺ அவர்கள் அப்போது ஆற்றிய அந்த சொற் பொழிவே 'நபியவர்களின் இறுதிப் பேருரை' என்பதாக இன்று அறியப்படுகிறது.

கூட்டம் பிரமாண்டமாக இருந்ததால், நபியவர்களின் சொற்பொழிவு அனைவரின் செவிகளுக்கும் சென்றடைவது சாத்தியமில்லை என்ற நிலை உருவானது. எனவே, அங்கிருந் தோரிலேயே மிக உரத்த குரல் கொண்டிருந்த ரபீஆ இப்னு உமய்யா இப்னு கலஃபை அழைத்து, தமது பேச்சை எல்லோரும் செவியுறும் விதமாக ஒவ்வொரு வாக்கியமாய் திரும்பச் சொல்லுமாறு பணித்தார்கள்.[1]




நிச்சயமாக எல்லாப் புகழும் அல்லாஹ்வுக்கே! அவனையே நாம் புகழ்கிறோம்; அவனிடமே நாம் உதவி தேடுகிறோம்; அவனிடமே நாம் பாவ மன்னிப்பு கோருகிறோம். நமது மனஇச்சைகளின் கெடுதிகளை விட்டும், நமது செயல்களின் தீமையை விட்டும் அல்லாஹ்விடம் பாதுகாவல் தேடுகிறோம். யாருக்கு அல்லாஹ் நேர்வழி காட்டுவானோ, அவரை வழிகெடுப்பவர் யாரும் இல்லை. யாரை அல்லாஹ் வழிகேட்டில் விட்டுவிடுவானோ, அவரை நேர்வழியில் செலுத்துபவர் யாரும் இல்லை. இன்னும், நான் சாட்சி சொல்கிறேன்: ‘அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாரும் இல்லை. அவன் தனித்தவன்; அவனுக்கு இணை யாரும் இல்லை.’ மேலும், நான்




சாட்சி சொல்கிறேன்; ‘நிச்சயமாக முஹம்மது, அவனுடைய அடியாரும் அவனுடைய தூதரும் ஆவார்.’[2]

ஓ... மக்களே! என் பேச்சை கவனமாகக் கேளுங்கள்! இந்த ஆண்டிற்குப் பிறகு மீண்டும் உங்களை இந்த இடத்தில் சந்திப்பேனா என்பது எனக்குத் தெரியாது.[3]




மக்களே! உங்கள் இறைவன் ஒருவனே; (உங்கள் தந்தையும் ஒருவரே!•) அறிந்து கொள்ளுங்கள்: எந்த ஓர் அரபிக்கும் அரபி அல்லாத ஒருவரை விடவோ, எந்த ஓர்

அரபி அல்லாதவருக்கும் அரபியர் ஒருவரை விடவோ எவ்வித மேன்மையும் சிறப்பும் இல்லை. எந்த ஒரு வெள்ளையருக்கும் கருப்பர் ஒருவரை விடவோ, எந்த கருப்பருக்கும் வெள்ளையர் ஒருவரை விடவோ எவ்வித மேன்மையும் சிறப்பும் இல்லை. இறையச்சம் மட்டுமே ஒருவரின் மேன்மையை நிர்ணயிக்கும். நிச்சயமாக அல்லாஹ்விடத்தில் உங்களில் மிகச் சிறந்தவர் உங்களில் அதிகம் இறையச்சம் உள்ளவர்தான்.[4]




ஓ... மக்களே! அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்; கருப்பு நிற (அபிசீனிய) அடிமை ஒருவர் உங்களுக்குத் தலைவராக ஆக்கப்பட்டாலும், அவர் அல்லாஹ்வின் வேதத்தைக் கொண்டு உங்களை வழி நடத்தி, அதை




உங்களுக்கிடையில் நிலைநிறுத்தும் காலமெல்லாம் (அவரது சொல்லைக்) கேட்டு நடங்கள்; (அவருக்குக்) கீழ்ப்படியுங்கள்!![5]

ஓ... மக்களே! இந்த (துல்ஹஜ்) மாதமும், இந்த (துல்ஹஜ் 9ம்) நாளும், இந்த (மக்கா மா)நகரமும் எவ்வளவு புனிதமானவையோ அப்படியே உங்கள் உயிர்களும், உங்கள் உடைமைகளும் உங்கள் மானம், மரியாதைகளும் உங்களுக்குப் புனிதமானவை.[6]




அறிந்து கொள்ளுங்கள்! எனக்குப் பிறகு ஒருவர் மற்றவரின் கழுத்தை வெட்டி மாய்த்துக் கொள்ளும் - வழி கெட்டவர்களாய் (•-இறைநிராகரிப்பாளர் களாய்) மாறிவிடாதீர்கள்.[7]

உங்கள் இறைவனை நீங்கள் சந்திக்கின்ற வரை (இப்படியே வாழுங்கள்). நீங்கள் அனைவரும் தவறாமல் அல்லாஹ்வின் முன்னிலையில் ஆஜராகப் போகிறீர்கள்! அப்போது அல்லாஹ் உங்களது செயல்களைப் பற்றி விசாரிப்பான். நான் மார்க்கத்தை உங்களுக்கு எடுத்துரைத்து விட்டேன். உங்களில் எவராவது மற்றவருடைய பொருளின் மீது பொறுப்பேற்றிருந்தால், அதை அவர் உரிய முறையில் அதன் உரிமையாளரிடம் ஒப்படைத்து விடட்டும்![8]




ஓ... மக்களே! முஸ்லிம்கள் அனைவரும் சகோதரர்கள். உங்கள் அடிமைகள் விஷயத்தில் பொறுப்புணர்வோடு நடந்து கொள்ளுங்கள். அவர்களை நன்றாகப் பராமரியுங்கள்! நீங்கள் உண்பதையே அவர்களுக்கும் உண்ணக் கொடுங்கள்; நீங்கள் உடுத்துவதையே அவர்களுக்கும் உடுத்தச் செய்யுங்கள்![9]




ஓ... குறைஷிகளே! நாளை மறுமைக்கான தயாரிப்புடன் மக்கள் வரும்போது, நீங்கள் உங்கள் பிடரிகளின் மீது உலகச் சுமைகளைச் சுமந்துகொண்டு வந்து விடாதீர்கள். அப்போது அல்லாஹ்வின் புறத்திலிருந்து நான் எந்த ஒரு விஷயத் திலும் உங்களுக்குப் பலன் அளித்துவிட முடியாது.[10]

அறியாமைக் காலத்தின் அனைத்து விவகாரங்களும் என் பாதங்களுக்குக் கீழே புதைக்கப்பட்டு விட்டன. அறியாமைக் காலத்தில் நிகழ்ந்துவிட்ட உயிர்க் கொலைகளுக்கான பழிவாங்குதல் அனைத்தும் ரத்து செய்யப்பட்டு விட்டன. முதலாவதாக, நம்மிடையே நடைபெற்ற



கொலைகளில் ரபீஆ இப்னு ஹாரிஸின் மகன் கொலை செய்யப் பட்டதற்கான பழிவாங்கலை நான் தள்ளுபடி செய்கிறேன். -அவன் பனூ ஸஅது குலத்தாரிடம் பால்குடிப் பாலகனாக இருந்து வந்தான். அவனை ஹுதைல் குலத்தார் கொன்று விட்டனர்.- அறியாமைக் காலத்தில் இருந்த வட்டியும் என் பாதங்களுக்குக் கீழே புதைக்கப் படுகிறது. (• ஆனால், உங்கள் அசல் தொகை உங்களுக்கே உரியது. நீங்களும் அநீதியிழைக்கக் கூடாது; உங்களுக்கும் அநீதி இழைக்கப் படக் கூடாது.) முதலாவதாக, நம்மவர் கொடுத்திருந்த வட்டிகளில் அப்பாஸ் இப்னு அப்துல் முத்தலிபுக்குரிய வட்டியை நான் தள்ளுபடி செய்கிறேன். அவரது வட்டி அனைத்தும் அசலுடன் தள்ளுபடி செய்யப்படுகின்றது.[11]




ஓ... மக்களே! ஒவ்வொருவருக்கும் சொத்தில் அவரவரின் உரிமைகளை

அல்லாஹ் வழங்கி இருக்கின்றான். இனி, எவரும் தமது எந்த வாரிசுக்கும் உயில் எழுதக்கூடாது. அறிந்து கொள்ளுங்கள்! குழந்தை விரிப்புக்கே சொந்தமானது. (அனுமதிக்கப்பட்ட திருமண உறவுடன் இருக்கும் கணவனுக்கே குழந்தை உரியதாகும்.) மணமுடித்துக் கொண்ட பிறகும் விபசாரம் செய்பவர் கல்லெறிந்து கொல்லப்பட வேண்டும். எவர் தம் தந்தை அல்லாத வரை தம்முடைய தந்தையாக அழைக்கிறாரோ, எவர் தம் எஜமானர் அல்லாதவருடன் தம்மை இணைத்துக் கொள்கிறாரோ, அவர்கள் மீது அல்லாஹ்வுடைய, வானவர்களுடைய இன்னும், மக்கள் அனைவருடைய சாபமும் உண்டா கட்டும்! அவர்களின் கடமையான உபரியான எந்த வணக்கமும் ஏற்றுக் கொள்ளப்படாது.[12]




ஒரு பெண் தமது கணவரின் வீட்டிலிருந்து அவரது அனுமதியின்றி

எதையும் செலவு செய்யக்கூடாது. அப்போது, ‘உணவையுமா?’ என்று கேட்கப்பட்டது?

அதற்கு நபியவர்கள், ‘ஆம்! அதுதான் நமது செல்வங்களில் மிகச் சிறந்தது’ என்றார்கள்.[13]

இரவலாக வாங்கப்பட்ட பொருட்கள் உரியவரிடமே ஒப்படைக்கப்பட வேண்டும். பாலைக் கொண்டு பயன்பெற கொடுக்கப்பட்ட கால்நடைகள் (அவற்றின் பயன்பாடு முடிந்த உடன்) அவற்றின் உரிமையாளரிடமே திருப்பிக் கொடுக்கப்பட வேண்டும்; கடன்கள் நிறைவேற்றப்பட வேண்டும்; இழப்பீடுகளை நிறைவேற்ற தலைவனே பொறுப்பாளன்.[14]




மக்களே... கவனியுங்கள்! பெண்கள் விஷயத்தில் அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்; அவர்களுக்கு நன்மையே நாடுங்கள்; அவர்கள் உங்களுக்குக் கட்டுப்பட்டவர்கள். அல்லாஹ்வுடைய அமானிதமாக• அவர்களை நீங்கள் பெற்றுள்ளீர்கள்! எப்படி உங்கள் மனைவியர் மீது உங்களுக்கு உரிமைகள் இருக்கின்றனவோ, அதே போல் உங்கள் மனைவியருக்கும் உங்கள் மீது உரிமைகள் இருக்கின்றன. அவர்களுக்குரிய கடமை என்ன வென்றால், நீங்கள் எவரை விரும்பமாட்டீர்களோ, அவரை உங்கள் வீட்டுக்குள் அவர்கள் அனுமதிக்காமல் இருக்கட்டும்; இன்னும், மானக்கேடான செயலைச் செய்யாமல் இருக்கட்டும்! அவர்கள் குற்றம் புரிந்தால், அவர்களைத் தண்டிக்கிற உரிமையும் உங்களுக்கு

உண்டு. அதாவது, அவர்களைப் படுக்கையிலிருந்து ஒதுக்குங்கள்; இலேசாக, காயப்படுத்தாமல் அடியுங்கள். அவர்கள் தவறிலிருந்து விலகிக் கொண்டால், அவர்களுக்கு ஒழுங்கான முறையில் உணவும் உடையும் வழங்குங்கள்; அவர்களுக்கு நன்மையே நாடுங்கள். அவர்கள் உங்களிடம் உங்களின் உதவியாளர்களாகவும் உங்களைச் சார்ந்தவர்களாகவும் இருக்கிறார்கள். • நீங்கள் அவர்களிடமிருந்து அதை (ஆகுமான முறையில் சுகம் அனுபவிப்பதை)த் தவிர வேறெதையும் உரிமையாக்கிக் கொள்ள மாட்டீர்கள். மேலும், நினைவில் நிறுத்திக் கொள்ளுங்கள். அல்லாஹ்வின் பெயரை முன்மொழிந்தே நீங்கள் அவர்களுடன் மணவாழ்க்கை மேற்கொண்டுள்ளீர்கள்![15]




மக்களே! சிந்தித்துப் புரிந்து கொள்ளுங்கள்; எனது பேச்சைக்

கவனமாகக் கேட்டுக் கொள்ளுங்கள். நான் எனது பிரசாரத்தை உங்களுக்கு எடுத்துரைத்து விட்டேன். உங்களிடையே அல்லாஹ்வின் வேதத்தை(யும் அவனுடைய தூதரின் வழிமுறையையும்•) விட்டுச் செல்கிறேன். நீங்கள் அவற்றைப் பின்பற்றினால், ஒருபோதும் வழிகெட மாட்டீர்கள்![16]




மக்களே! உங்கள் இந்த நகரத்தில், தான் வணங்கப்படுவதைப் பற்றி ஷைத்தான் நம்பிக்கை இழந்து விட்டான். ஆனாலும், அவன் மகிழ்ச்சியுறும் விதமாய் நீங்கள் அற்பமாகக் கருதும் சில விஷயங்களில் அவனுக்குக் கீழ்ப்படிவீர்கள். ஆகவே,

உங்கள் மார்க்க விஷயத்தில் அவனிடம் எச்சரிக்கையாக இருந்து கொள்ளுங்கள்![17]

இன்னும், (மகா பொய்யன்) தஜ்ஜாலைப் பற்றியும் உங்களை எச்சரிக்கிறேன். அல்லாஹ் அனுப்பிய எந்த இறைத்தூதரும் (அவனைப் பற்றித்) தம் சமுதாயத்தாரை எச்சரிக்காமல் இருந்த தில்லை. (இறைத் தூதர்) நூஹ் (அலை) அவர்கள் (தம் சமுதாயத் தாரை) அவனைப் பற்றி எச்சரித்தார்கள். அவர்களுக்குப் பின்னால் வருகை தந்த இறைத் தூதர்களும் எச்சரித்தார்கள். மேலும், (என் சமுதாயத்தினரான) உங்களிடையேதான் (இறுதி காலத்தில்) அவன் தோன்றுவான். அவனது (அடையாளத்) தன்மைகளில் ஏதேனும் சில உங்களுக்குப் புலப்படாமல் போனாலும், நிச்சயமாக உங்கள் இறைவன் உங்களுக்குத் தெரியாதவனல்லன் என்பது உங்களுக்கு

நன்றாகவே தெரியும்! -இதை மூன்று முறை கூறினார்கள்- உங்கள் இறைவன் ஒற்றைக் கண்ணன் அல்லன். அவனோ, (தஜ்ஜாலோ) வலது கண் குருடானவன், அவனது கண் (குளையிலிருந்து) வெளியே தள்ளிக் கொண்டிருக்கும் திராட்சை போன்று இருக்கும்.[18]




(மாதத்தின் நாட்களை தன் இஷ்டப் படி) முன் பின்னாக்குவதெல்லாம் இறை நிராகரிப்பை அதிகரிக்கும் செயலாகும். இதனால் நிராகரிப்பவர்கள்தான் வழி கெடுக்கப்படுகிறார்கள். ஏனென்றால், அவர்கள் தங்கள் இஷ்டப்படி மாதங் களை முன் பின்னாக்கி ஓர் ஆண்டில் அம்மாதங்களில் போர் புரிவதை ஆகுமாக்கிக் கொள்கிறார்கள்.

மற்றோர் ஆண்டில் அதே மாதங்களில் போர் புரிவது கூடாது என்று தடுத்து விடுகிறார்கள். இவ்வாறு அவர்கள் செய்வதன் நோக்கமெல்லாம் தாங்கள் தடுத்திருக்கும் மாதங்களின் எண்ணிக்கையை அல்லாஹ் தடுத்திருக்கும் மாதங்களின் எண்ணிக்கைக்குச் சரியாக்கி, அல்லாஹ் தடுத்திருக்கும் மாதங்களையும் தாங்கள் ஆகுமாக்கிக் கொள்வதற்குத்தான்.[19]

அறிந்து கொள்ளுங்கள்: நிச்சயமாக காலம், வானங்களையும் பூமியையும் அல்லாஹ் படைத்த அன்றிருந்த அதன் அமைப்பைப் போன்றே, இப்போது சுற்றி வந்து விட்டது. அல்லாஹ் விடத்தில் மாதங்களின் எண்ணிக்கை பன்னிரெண்டு ஆகும். இப்படித்தான் வானங்களையும் பூமியையும் அல்லாஹ் படைத்த அன்று, அவனது புத்தகத்தில் பதிவு செய்யப்பட்டு உள்ளது. அவற்றில் நான்கு மாதங்கள் புனிதமானவை ஆகும். மூன்று,

தொடர்ந்து வருபவை. அவை துல்கஅதா, துல்ஹஜ், முஹர்ரம், நான்காவது ஜுமாதல் ஊலாவிற்கும் ஷஅபானிற்கும் இடையில் உள்ள ரஜப் ஆகும்.[20]




ஒவ்வொரு முஸ்லிமும் மற்ற முஸ்லிமுக்குச் சகோதரர் ஆவார். முஸ்லிம்கள் அனைவரும் சகோதரர்களே! ஒரு முஸ்லிமின் பொருள் பிறருக்கு அறவே ஆகுமானதல்ல; மனமுவந்து கொடுத்தாலே தவிர! உங்களுக்குள் நீங்கள் அநீதம் இழைத்துக் கொள்ளாதீர்கள்.[21]




ஓ... மக்களே! உங்கள் இறைவனையே வணங்குங்கள்; உங்கள் இறைவனையே

பயந்து கொள்ளுங்கள்; கடமையான ஐவேளைத் தொழுகையையும் தவறாது பேணுங்கள்; (ரமழானில்) நோன்பு நோற்று வாருங்கள்; விருப்பமுடன் ஸகாத் கொடுத்து விடுங்கள்; அல்லாஹ்வின் இல்லத்தை ஹஜ் செய்யுங்கள்; உங்களில் அதிகாரம் உடையோருக்குக் கட்டுப்பட்டு நடங்கள்; நீங்கள் சொர்க்கம் செல்வீர்கள்![22]




ஒருவர் குற்றம் செய்தால் அதற்கான தண்டனை அவருக்கே கொடுக்கப்படும். மகனுடைய குற்றத்திற்காக தந்தையோ, தந்தையின் குற்றத்திற்காக மகனோ தண்டிக்கப்பட மாட்டார்.[23]




ஒவ்வோர் இறைத்தூதரின் பிரார்த்தனையும் (இவ்வுலகிலேயே) முடிந்து விட்டது. என் பிரார்த்தனையைத் தவிர! நான் அதை மறுமை நாளுக்காக என் இறைவனிடம் சேமித்து வைத்திருக்கி றேன். அறிந்து கொள்ளுங்கள்: மறுமை நாளில் இறைத் தூதர்கள், தங்களது சமுதாயத்தினர் அதிகமாக இருப் பதைக் கொண்டு மகிழ்ச்சியுறுவார்கள். அப்போது என்னை நீங்கள் கேவலப்படுத்தி விடாதீர்கள். நான் உங்களுக்காக கவ்ஸர் நீர் தடாகத்திற்கு அருகில் உட்கார்ந்திருப்பேன்.[24]

மக்களே! எனக்குப்பின் எந்த ஓர் இறைத்தூதரும் இல்லை; உங்களுக்குப்பின் எந்த ஒரு சமுதாயமும் இல்லை.[25]

இங்கு வந்திருப்பவர்கள், வராதவர்களுக்கு (இந்த மார்க்கத்தை)

எடுத்துச் சொல்லட்டும்; விஷயம் சென்று சேருபவர்களில் சிலர், நேரடியாக கேட்பவரைவிட நன்கு ஆராயும் தன்மை உடையவராக இருக்கலாம்.[26]

பிறகு நபி (ஸல்) அவர்கள் மக்களை நோக்கி, “மறுமை நாளில் உங்களிடம் என்னைப் பற்றி விசாரிக்கப்படும்போது நீங்கள் என்ன சொல்வீர்கள்?” என்று கேட்டார்கள். அதற்கு மக்கள், “நீங்கள் (மார்க்க போதனைகள் அனைத்தையும் எங்களிடம்) தெரிவித்து விட்டீர்கள்; (உங்களது தூதுத்துவப் பொறுப்பை) நீங்கள் நிறைவேற்றி விட்டீர்கள்; (சமுதாயத்திற்கு) நன்மையை நாடினீர்கள் என நாங்கள் சாட்சியம் அளிப்போம்” என்றார்கள்.

உடனே, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், தமது ஆட்காட்டி விரலை வானை நோக்கி உயர்த்தி சைகை செய்துவிட்டு, அதை

மக்களை நோக்கித் தாழ்த்தி “அல்லாஹ்வே! இதற்கு நீயே சாட்சி! அல்லாஹ்வே! இதற்கு நீயே சாட்சி! அல்லாஹ்வே! இதற்கு நீயே சாட்சி!” என்று கூறி, தங்களது உரையை நிறைவு செய்தார்கள்.[27]

இவ்வாறு அவர்கள் கூறிய அதே இடத்தில் அல்லாஹ் கீழ் காணும் இறைவசனத்தை இறக்கி அருளினான்:

“இன்றைய தினம் உங்களுக்காக உங்கள் மார்க்கத்தை முழுமையாக்கி விட்டேன்; மேலும், நான் உங்கள் மீது என் அருட்கொடையைப் பூர்த்தியாக்கி விட்டேன்; இன்னும், உங்களுக்காக நான் இஸ்லாமை மார்க்கமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். (அங்கீகரித்துக் கொண்டேன்.)”

(அல்குர்ஆன் 5:3)[28]

# ஆதார நூற்கள்


1) அல் பிதாயா - இப்னு கஸீர் - 5/189

2) ஸுனன் இப்னு மாஜா - 1892, 1893

3) தாரீக் இப்னு கல்தூன் - 2/58, இப்னு ஹிஷாம் - 2/603, அர்ரஹீக் அல்மக்தூம் 461

4) அஸ்ஸில்ஸிலதுல் ஸஹீஹா - 2700, அத்தர்கீப் வத்தர்ஹீப் - 2963, அல் பைஹகீ.

5) ஸுனன் நஸாயீ - 4192, ஜாமிவுத் திர்மிதீ - 1706, ஸஹீஹுல் ஜாமிஇ - 7861

6) ஸஹீஹ் முஸ்லிம் - 2334, ஸஹீஹுல் புகாரீ - 67, 105, 1741, 1742...

7) ஸஹீஹுல் புகாரீ - 4403, 1739-41, 4405 (4406•) ஸுனன் நஸாயீ - 5577

8) ஸஹீஹுல் புகாரீ - 4406, தாரீக் இப்னு கல்தூன் - 59/2, ஃபிக்ஹுஸ் ஸீரா - 456, மிஷ்காத் - 2659

9) தபகாத் இப்னு ஸஅது, முஹம்மது அந்நபிய்யுல் காதிம் - மாஜித் அலீ கான்.

10) மஜ்மவுஸ் ஸவாயிது - 272/3.

11) ஸஹீஹ் முஸ்லிம் - 2334, இப்னு மாஜா - 3055, ஜாமிவுத் திர்மிதீ - 3078

12) ஸுனன் நஸாயீ - 3642, ஸுனன் அபூதாவூத் - 2870, 3565, தபகாத் இப்னு ஸஅது.

13) ஸஹீஹுல் ஜாமிஇ - 1789, ஸுனன் அபூதாவூத் - 3565

14) ஸுனன் அபூதாவூத் - 3565, ஜாமிவுத் திர்மிதீ - 2120

15) ஸஹீஹ் முஸ்லிம் - 2334, ஜாமிவுத் திர்மிதீ - 1163, 3087, ஸஹீஹுத் தர்கீப் - 1930, ஸஹீஹுல் ஜாமிஇ - 7880, •ஃபிக்ஹுஸ் ஸீரா - 456

16) ஸஹீஹ் முஸ்லிம் - 2334, ஸுனன் இப்னு மாஜா - 3074, •முஅத்தா இமாம் மாலிக் / மிஷ்காத் - 182. ஸஹீஹுத் தர்கீப் - 40, பிக்ஹுஸ் ஸீரா 456, தாரீக் இப்னு கல்தூன் 59/2.

17) ஃபிக்ஹுஸ் ஸீரா - 456, ஸஹீஹுல் ஜாமிஇ - 7880, முஸ்தத்ரகுல் ஹாகிம், ஸஹீஹுத் தர்கீப் - 40.

18) ஸஹீஹுல் புகாரீ - 4402

19) தாரீக் இப்னு கல்தூன் - 59/2, ஸுனன் இப்னு மாஜா - 3055.

20) ஸஹீஹுல் புகாரீ - 4662, 4406, 3197, ஸுனன் அபூதாவூத் - 1942, பிஃக்ஹுஸ் ஸீரா - 456, தாரீக் இப்னு கல்தூன் - 59/2.

21) ஜாமிவுத் திர்மிதீ - 3078, ஸஹீஹுல் ஜாமிஇ - 7880, தாரீக் இப்னு கல்தூன் - 59/2, ஃபிக்ஹுஸ் ஸீரா - 456.

22) ஜாமிவுத் திர்மிதீ - 616, ஸஹீஹுத் திர்மிதீ - 516, மிஷ்காத் - 571, அஸ்ஸில்ஸிலதுல் ஸஹீஹா - 524, ஸஹீஹுல் ஜாமிஇ - 109, முஸ்னத் அஹ்மத், தாரீக் இப்னு ஜரீர், தாரீக் இப்னு அஸாகீர், மஆதினுல் அஃமால் - 1108, 1109,

23) ஸஹீஹுல் ஜாமிஇ - 7880, ஜாமிவுத் திர்மிதீ - 2159, 3078, ஸஹீஹுத் திர்மிதீ - 373, 461, ஸுனன் இப்னு மாஜா - 3055, ஸஹீஹ் இப்னு மாஜா - 1015.

24) மஜ்மவுஸ் ஸவாயிது - 271/3.

25) ளிலாலுல் ஜன்னா - 1061

26) ஸஹீஹுல் புகாரீ - 67, 105, 1741.

27) ஸஹீஹ் முஸ்லிம் - 2334

28) ஸஹீஹுல் புகாரீ - 4406, 4407, முஸன்னஃப் இப்னு அபீ ஷைபா, தாரீக் இப்னு ஜரீர், தாரீக் இப்னு கஸீர், அத்துர்ருல் மன்ஸூர்.

• அமானிதம் - எந்தத் தீங்கும் இழைக்காமல் பாதுகாத்து பராமரிக்குமாறு - நம்பிக்கையின் அடிப்படையில் ஒப்படைக்கப்பட்ட அடைக்கலப் பொறுப்பை இச்சொல் குறிக்கிறது. அந்த பொறுப்புணர்வில் தவறிழைத்தால், தண்டனை உண்டு என்றும் எச்சரிக்கிறது.